ஜென் சிறுகதைகள் உங்கள் வாழ்க்கைக்குத் தேவையான தம் கருத்தை மிகச் சாமர்த்தியமாக சரியான முறையில், சரியான சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக் கொண்டு உங்களுக்கு விளங்க வைக்கும் அரிய, அற்புதமான ஒரு வெளிப்பாடு.

**ஓஷோ**

சிந்திக்க வைக்கும்

# ஜென் கதைகள்



அகம் அற்புதம்

தொகுப்பு

அகம், அற்புதம்

முதலில் நீங்கள் ஜென் என்றால் என்ன என்பது பற்றித் தெரிந்து கொள்ளவேண்டும் என்று நான் ஆசைப்படுகிறேன். நீங்கள் அதைச் சரியாக அறியாவிட்டால், நான் சொல்லும் உதாரணங்கள் மற்றும் கதைகளால் எந்த பயனும் இருக்காது. அவைகளின் பின்னணியைப் பற்றி நீங்கள் அறிந்துகொள்ளுவது அவசியமாகிறது. அப்பொழுதுதான், அதன் உள் அர்த்தம் மிக அற்புதமாக விளங்கும். அந்த அர்த்தம் திடீரென்று உதயமாகி, அதன் முக்கியத்துவத்தை உணர வைக்கும். இல்லாவிட்டால், அவை தனித்தனியாகவே இருக்கும். அதை நீங்கள் அனுபவிக்கலாம். அதில் இருக்கும் நகைச்சுவையை பார்த்து சிறிது சிரிக்கலாம். அதன் கவித்தன்மையை உணர்ந்து ஆனந்தப்படலாம்.

ஜென் என்பது மிகவும் அரிய, அற்புதமான வெளிப்பாடு. அந்த வெளிப்பாட்டுக்கு மேற்கண்ட ஏற்ற சூழ்நிலை ஏற்பட்டால்தான், அது, தன் பலனை கொடுக்கும். இப்பொழுது ஒரு கதைக்கு வருவோம். பொகூஜு என்ற குருவிடம் சிலர், “நாங்கள் ஒவ்வொரு நாளும் உடை உடுத்துகிறோம், சாப்பிடுகிறோம், இதிலிருந்து நாங்கள் எப்படி விடுபடுவது?” என்று கேட்டார்கள். அதற்கு அந்த குரு, “ஆமாம். நாம் சாப்பிடுகிறோம். உடை உடுத்திக் கொள்கிறோம். அதில் என்ன?” என்றார். அதற்கு அவர்கள், “எங்களுக்கு நீங்கள் சொல்வது புரியவே இல்லை,” என்றார்கள். அவர், “ஓ, உங்களுக்கு புரியாவிட்டால், மீண்டும் உடைய உடுத்துங்கள். நன்றாக சாப்பிடுங்கள்,” என்றார்.

இந்த சிறிய கதை மிகவும் அர்த்தம் நிறைந்தது. எது உங்கள் உள்மைய நிலையிலிருந்து வெளிப்படுகிறதோ, அதை பிறருக்கு விவரிக்க இயலாது, ஆனால் காட்ட முடியும் என்று ஜென் மக்கள் பொதுவாக சொல்வார்கள். அதே போல, ஒரு சூழ்நிலையை உருவாக்கி, அதன் அர்த்தத்தைக் குறிப்பால் உணர்த்த முடியும். ஆனால் வார்த்தைகளால் சொல்ல முடியாது. அதை ஒரு சிறு நிகழ்ச்சி வெளிப்படுத்தி விடும். ஜென் முழுக்க முழுக்க சிறுகதைகள், நிகழ்ச்சிகள், உதாரணங்கள் மூலமாகவே வளருகிறது. வேறு எந்த பிரிவினரும், இவ்வளவு அழகாக தம் கருத்துக்களை சில நீதிக்கதைகள் மூலமாக உணர்த்தியதில்லை. சூஃபி சிறுகதைகள் மற்றும் ஹேசிட் நீதிக்கதைகள் எல்லாம் இருக்கின்றன. ஆனால் இவைகளெல்லாம் ஜென் கதைகளுக்கு ஈடாகாது.

ஜென் சிறுகதைகள், தம் கருத்தை மிகச் சாமர்த்தியமாக சரியான முறையில், சரியான சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக் கொண்டு விளங்க வைக்கும். ஆனால், நீங்கள் சிறிது அலட்சியமாக இருந்தாலும், அதனுடைய கருத்தை நழுவவிட்டு விடுவீர்கள். அதனுடைய உள் அர்த்தத்தை நீங்கள் முயன்று தேட வேண்டும். அதை அறிய மிக ஆவல் கொண்டவராக இருக்க வேண்டும். ஏனெனில், அந்த சிறுகதை மிகச்சிறியது. அதன் நுண்ணிய கருத்தை அடைய நிறைய சந்தர்ப்பம் உண்டு. அந்த கதையை புரிந்து கொள்ள அறிவு தேவை இல்லை. அவ்வளவு எளிமையானது. ஆனால் அதன் உள் அர்த்தத்தை புரிந்து கொள்ள சிறிது சிந்தனை வேண்டும். உங்கள் உள்ளம் மலர்ந்து இருக்க வேண்டும்.

- புல் தானாகவே வளர்கிறது புத்தகத்தில் ஓஷோ.



# என்னுரை

என் வாழ்வில் மாற்றம் பலதிற்கும் காரணமானவற்றில் "ஜென்" கதைகளை புறக்கணிக்கவே முடியாது. இன்னும் சொல்லப்போனால் வாழ்க்கையில் தேவையான பல சிறிய நுணுக்கமான ஆனால் முக்கியமான விஷயங்களை ஜென் கதைகள் மூலமாகவே நான் கற்றுக் கொண்டேன். இல்லை, இல்லை. அவைகளை என் மனதில் உட்புகுத்தி அகத்தாய்வு செய்ததாலேயே என் வாழ்வில் மாற்றம் பெற்றேன். என் கோபம் எல்லாம் எங்கே போனது என்று எல்லோரும் கேட்பார்கள். "ஜென்" சொல்லும் நிகழ்கண தத்துவம் என்றுதான் சொல்வேன். வாழ்வில் தியரி என்பது எதுவும் இல்லை எல்லாமே கற்றலின் ஒரு பகுதிதான் என்று புரிந்தது ஜென் மூலம் தான். என்னுடன் வேலை பார்ப்பவர்கள் அனைவரும், "அவர்கிட்ட போனா நிறைய கத்துக்கலாம்" என்பார்கள். உண்மையில் நான் அவர்களுக்கு எதுவும் கற்றுத்தருவதே இல்லை. மாறாக அவர்களை கற்றலை தனியாக ஒரு சுமையாக இல்லாதபடி அவர்கள் செய்ய வேண்டிய பணியிலேயே ஒன்றிணைத்துவிடுகிறேன். இதை ஜென் கொண்டு அறியாமல் இருந்திருந்தால் என்னால் பெற்று செயல்படுத்தியிருக்க முடியாது. இப்படி நிறைய சொல்லிக் கொண்டே போகலாம்.

இந்த தொகுப்பில் சொல்லப்பட்டிருக்கும் கதைகள் யாவும் உங்களுக்கு வாழ்க்கையில் எதையோ ஒன்றை சொல்லிக் கொடுக்கலாம். ஒவ்வொரு கதையை படித்த பின்னும் ஒரு அரை மணி நேரமாவது அது என்ன சொல்ல வருகிறது, அது நம் வாழ்க்கையில் எப்படி பயன்படும் என்று எண்ணிப்பாருங்கள். அதனை உங்கள் குறிப்பேட்டில் குறித்துக் கொள்ளுங்கள். இயல்பை பற்றி உணருங்கள். சரியாக சொன்னால் உண்ணுங்கள், உடை உடுத்திக். கொள்ளுங்கள், தோட்டத்தை சுத்தப்படுத்துங்கள், உறங்குங்கள்.. இதுதான் ஜென்.

ஏ.வி.ஆர்.

# சரியானதும் தவறானதும்

பான்கெய் என்ற ஒரு புகழ் பெற்ற ஜென் துறவி ஜப்பான் தேசத்தில் வாழ்ந்து வந்தார். அவரின் தவசக்தியாலும், மக்களுக்கான அவரின் ஞான அறியுரைகளாலும் அவர் நாடு முழுக்க புகழ் பெற்றிருந்தார். இக்காரணத்தினால் அந்நாட்டின் அரசன் முதல் ஆண்டி வரை எல்லோரின் பிள்ளைகளும் சில காலம் அவரிடம் ஆன்மிக கல்விக் கற்க ஆர்வம் கொண்டிருந்தனர்.

அப்படி பலதரப்பட்ட மாணவர்கள் தன் ஆசிரமத்தில் தங்கி கல்வி பயிலும் போது, ஒரு நாள், ஒரு மாணவன் ஒரு பொருளை திருடும் செயலில் ஈடுபட்டு மாட்டிக்கொண்டான். அப்படி சிக்கிய அம்மாணவனை மற்ற மாணவர்கள் அனைவரும் குரு பான்கெய் முன் கொண்டு வந்து நிறுத்தினர்.அம்மாணவனின் குற்றத்தை எடுத்துரைத்து, ஆசிரமத்திலிருந்து அவனை வெளியேற்றுமாறு அனைவரும் கூறினர். பான்கெய் எதுவும் பேசாமலிருந்தார். சிறிது நேரத்தில் மாணவர்கள் அனைவரும் கலைந்து சென்றனர்.

சிறிது காலம் கழித்து அதே மாணவன், மீண்டும் அதே வகையான செயலை செய்து பிடிபட்டான். மீண்டும் அனைத்து மாணவர்களும் அவனை பான்கெய் முன்கொண்டு நிறுத்த, அவரும் வழக்கம் போல அமைதியாக இருந்தார். இத்தகைய செயல் பலமுறை தொடர்ந்தது. இறுதியாக பொறுமை இழந்த மற்ற மாணவர்கள், பான்கெய் முன் சென்று தொடர்ந்து திருட்டுச் செயலில் ஈடுபடும் அம்மாணவனை இம்மடத்திலிருந்து வெளியேற்றாவிட்டால், தாங்கள் அனைவரும் வெளியேறுவதாக கூறினார்கள்.

மாணவர்கள் இவ்வாறு கூறியதைக் கேட்ட பான்கெய் “உங்கள் விருப்பப்படியே நீங்கள் அனைவரும் இம்மடத்திலிருந்து வெளியேறலாம்” என்று கூறினார். இதைக் கேட்டு அதிர்ச்சியடைந்த மாணவர்களிடம் பான்கெய் மேலும் தொடர்ந்து “மாணவர்களே, நீங்கள் அனைவரும் அறிவாளிகள், உங்கள் அனைவருக்கும் சரியானது எது தவறானது எது என்ற வேறுபாடு தெரிகிறது. ஆனால் தவறிழைத்த அம்மாணவனுக்கோ இவற்றைப் பற்றி எதுவும் தெரியவில்லை”. “நானும் அவனை

இங்கிருந்து அனுப்பிவிட்டால் வேறு யார் அவனுக்கு நல்லவற்றைக் கற்றுக் கொடுப்பார்கள்"?

"ஆகையால் நீங்கள் அனைவரும் இங்கிருந்து சென்றாலும் பரவாயில்லை, அம்மாணவன் மட்டும் இங்கிருக்கட்டும்" என்று பான்கெய் கூறினார். இதைக் கேட்டுக்கொண்டிருந்த அத்தவறிழைத்த மாணவன், கண்ணீர் விட்டழுது பான்கெய்யிடம் மன்னிப்பு கேட்டான்.

அறியாமையால் தொடர்ந்து தவறிழைப்பவர்களுக்கு நாம் தரும் சிறந்த தண்டனை மன்னிப்பாகும்.



# உயர்ந்ததும் சிறந்ததும்

அது ஒரு ஜென் மடாலயம். அங்கிருந்த சீடர் களுக்கு தத்துவ கதை ஒன்றை குரு கூறினார். அந்தக் கதை இதுதான்.

அவன் ஒரு கல் உடைக்கும் தொழிலாளி. அந்தத் தொழிலில் அவனுக்கு பெரிய வருமானம் ஒன்றும் கிடைக்கவில்லை. அன்றாட வாழ்க்கையை ஓட்டுவதே பெரும் சுமையாக இருந்தது. அதனால் அவனுக்கு வாழ்க்கையே வெறுப்பாக இருந்தது.

ஒரு நாள், அவன் போன வழியில் ஒரு பணக்கார வீடு தென்பட்டது. அந்த வீட்டின் வாசல் வழியே அவன் கண்ணில் பட்ட அத்தனை பொருட்களும், செல்வங்களும் அவனை விழிபிதுங்க வைத்தன.

அடடா.. அந்த பணக்காரனுக்கு எத்தனை செல்வாக்கு. பணக்காரன் மீது பொறாமையாக இருந்தது. தனக்கும் அப்படி ஒரு வாழ்க்கை கிடைத்தால் எப்படியிருக்கும்? என நினைத்துப் பார்த்தான்.

என்ன அதிசயம்! அவன் பணக்காரனாகி விட்டான். வாழ்க்கையில் அவன் நினைத்துப் பார்த்திராத அளவுக்கு செல்வங்கள் குவிந்துவிட்டன.

மற்றொரு நாள் ஒரு பெரிய அரசு அதிகாரி பல்லக்கில் அவனை கடந்து சென்றார். அந்த அதிகாரியின் பின்னே பல சேவகர்கள், படை வீரர்கள். மக்கள் பயந்து கும்பிட்டு வழிவிட்டனர். அதிகாரியின் உத்தரவு தூள் பறந்தது. எப்பேர்ப்பட்ட பணக்காரனும் விழுந்து வணங்கினான். இப்போது கல் உடைப்பவன் மனசெல்லாம் அந்த அதிகாரிதான் நின்றார்.

'இருந்தா இப்படியல்லவா இருக்கணும். என்னா அதிகாரம்' என்று நினைத்தான். அவன் நினைப்பு பலித்தது. பெரும் அதிகாரம் படைத்த அதிகாரியாகி விட்டான். அவனைப் பார்த்தாலே எல்லோரும் பயந்தனர்.

கொஞ்ச நாளில் மக்கள் வெறுக்கும் அளவுக்கு அவன் அதிகாரம் எல்லை மீறிப் போனது.

ஒரு கோடை நாள், தனது பல்லக்கில் பயணித்துக் கொண்டிருந்தான், இப்போது அதிகாரியாக இருக்கும் கல் உடைப்பவன். வெயில் சுள்ளென்று சுட்டது. இருக்கையில் உட்காரவே முடியாத அளவு வெப்பம் தகித்தது. அண்ணாந்து பார்த்தான். வானத்தில் கம்பீரமாக தகதகத்தது சூரியன்!

'ஓ! உலகத்துக்கு மேலே உட்கார்ந்துகிட்டு இந்த சூரியன் என்னமா ஆட்டிப் படைக்குது. இருக்கட்டும்! நானும் சூரியனாகி எல்லாரையும் எனக்கு கீழே வச்சி வாட்டி எடுப்பேன்' என்றான்.

அவன் இப்போது சூரியனாகிவிட்டான்!

தனது கிரகணங்களை பல மடங்கு வெப்பமாக்கி பூமியில் செலுத்தி அத்தனைப் பேரையும் துன்புறுத்தினான். அவனுக்கு விவசாயிகளும் தொழிலாளர் களும் சாபமிட்டனர். அந்த நேரம் பார்த்து ஒரு கரிய மேகம் கடந்துபோனது. சூரியன் அந்த மேகத்துக்குள் மறைய, மக்கள் மகிழ்ந்தார்கள்.

'ஓகோ.. மேகம் நினைச்சா சூரியனையே காலி பண்ணிடுமா! அப்ப நானும் மேகமாகிட்டா போச்சு' என நினைத்தான். நினைத்தபடி மேகமாகிவிட்டான்.

இப்போது பூமியெங்கும் மழையை மடை திறந்த வெள்ளம் போல கொட்டினான். எங்கும் வெள்ளக்காடு. மக்கள் சபித்தனர். திடீரென பலத்த காற்று வீச, மேகம் தாக்குப் பிடிக்காமல் ஓடிப் போனது.

'இந்த காற்றுக்கு எவ்வளவு சக்தி.. நானும் காற்றாக மாறி உலகத்தை ஒரு வழி பண்றேன்' என்று நினைத்தான் மேகமாக இருந்த கல் உடைப்பவன்.

அப்படியே நடந்தது. மேகம் இப்போது வலிமையான காற்றாகி மாறி, பூமியையே ஆட்டிப் பார்த்தது. மரங்களையும் வீடுகளையும் பெயர்த்தெடுத்து

வீசியது. மக்கள் கோபமாகி திட்டித் தீர்த்தனர். அப்போது திடீரென ஏதோ ஒரு பெரிய உருவம் தடுத்து நிறுத்தியது போல உணர்வு. பார்த்தால் ஒரு பெரும் பாறை.

‘காற்றையும் தடுக்கும் அளவு இந்தப் பாறைக்கு பலமா, நானும் பாறையாவேன்’ என்றான். பாறையானான். பூமியில் யாராலும் அசைக்க முடியாத பலத்துடன் இருந்தான். அப்போதுதான் அந்த சத்தம் கேட்டது. ஒரு உளியை வைத்து தன் மீது யாரோ அடிக்கும் சத்தம்.

‘அட.. உலகின் சர்வ பலம் மிக்க இந்த பாறையை விட பலமானவன் யாரடா அது?’ என்று பார்த்தான், பாறையாக இருந்த கல் உடைப்பவன்.

அந்தப் பாறையை உளியால் உடைத்துக் கொண்டிருந்தான் ஒரு கல் உடைப்பவன்.

கதையை சொல்லி முடித்த குரு, “புரிந்ததா?” என்றார்.

# இரண்டே இரண்டு வார்த்தைகள்

அது ஒரு மிகப் பெரிய மடாலயம். ஒரு காலத்தில் அங்கு பேச்சுரிமை தடை செய்யப்பட்டிருந்தது. தடை என்றால் உங்க வீட்டுத் தடை எங்க வீட்டுத் தடை அல்ல... மாபெரும் தடை.

யாரும் பேசக் கூடாது. பேசவே கூடாது. ஒரே ஒரு விதிலக்கு...

பத்தாண்டுகளுக்கு ஒரு முறை புத்த பிட்சுகள் மட்டும் பேசலாம்... அதுவும் இரண்டே இரண்டு வார்த்தைகள் மட்டும்!

அந்த புத்தமடத்தில் தலைமைப் பிஷு இருந்தார். அவரது சீடர் ஒருவர் அந்த மடத்தில் 10 ஆண்டுகளை ஒரு வார்த்தைகூடப் பேசாமல் கழித்தார். பின்னர் தலைமைப் பிஷுவிடம் வந்தார்.

'சொல்லு... நீ பேச விரும்பும் இரு வார்த்தைகள் என்ன?'

'படுக்கை... கடினம்'

'ஓ... அப்படியா...' என்று பதிலளித்தார் தலைமை குரு.

பத்தாண்டுகள் கழித்து, அந்த பிஷு திரும்பி தலைமை குருவிடம் வந்தார்.

'ஓ அதற்குள் பத்தாண்டுகள் போய்விட்டதா...' – கேட்டார் தலைமை குரு.

'சரி... இந்த முறை நீ பேச விரும்பும் இரு வார்த்தைகள் என்ன?'

'சாப்பாடு... நாத்தம்..'

'ஓ... அப்படியா' என்று கேட்டுக் கொண்டார் தலைமை குரு.

மேலும் பத்தாண்டுகள் கழிந்தன. பிஷு வந்தார்.

தலைமை பிஷு, "ம்.. பத்துவருடங்கள் ஓடிவிட்டன... இப்போது நீ பேச விரும்பும் இரு வார்த்தைகள் என்ன?' என்றார்.

'நான்... போகிறேன்'

'நல்லது...' என்றார் குரு.

பின்னர், 'கண்ணா… இது நான் எதிர்ப்பார்த்த ஒண்ணுதான்…', என்ற தலைமை குரு, 'இந்த முப்பது வருடங்களும் நீ ஒன்றை மட்டும்தான் சொல்லிக் கொண்டிருந்தாய்… அது புகார்.. கிளம்பு!' என்றார்.



# மரணம்

ஜென் ஞானி ஒருவரின் மனைவி இறந்து விட்டார்.துக்கம் விசாரிக்க ஊரே திரண்டு வந்திருந்தது.எல்லோர் முகத்திலும் வருத்தம்,கண்ணீர்.

ஆனால் ஞானியோ கைகளால் தாளம் போட்டபடி பாடிக் கொண்டிருந்தார்,சர்வசாதாரணமாக!வந்தவர்களுக்கு அதிர்ச்சி.ஒருவன் துணிந்து கேட்டான்,"குருவே,நீங்களே இப்படி செய்யலாமா?என்ன இருந்தாலும் இவ்வளவு காலம் உங்களுடன் வாழ்ந்த உங்கள் மனைவி இறந்திருக்கும்போது,நீங்கள் கவலையின்றி பாடிக் கொண்டிருக்கிறீர்களே?"ஞானி சொன்னார்,"பிறப்பில் சிரிக்கவோ.இறப்பில் அழுவதற்கோ என்ன இருக்கிறது?பிறப்பும் இறப்பும் நம் கையில் இல்லை.

என் மனைவிக்கு முன்பு உடலோ,உயிரோ இல்லை.பிறகு உயிரும் உடலும் வந்தன.
இப்போது இரண்டும் போய்விட்டன.இடையில் வந்தவை இடையில் போயின.
இதில் வருத்தப்படுவதற்கு என்ன இருக்கிறது?"

# விடுதி

மன்னன் ஒருவன்,ஒரு ஜென் குருவை தன அரண்மனைக்கு வந்து தன்னுடன் தங்கும்படி அழைத்தான்.அதற்கு சம்மதித்த குரு மறுநாள் அரசனை சந்தித்தார்."சில நாட்கள் உன் விடுதியில் தங்கிப்போக வந்துள்ளேன்,"என்றார் அவர்.

மன்னனுக்கோ அதிர்ச்சி.அவன் குருவிடம் வருத்தத்துடன் கேட்டான் ,"குருவே,இது என் அரண்மனை.இதை விடுதி என்று சொல்கிறீர்களே?"குரு கேட்டார்,"மன்னா ,உனக்கு முன்னாள் இந்த அரண்மனையில் யார் இருந்தார்கள்?"மன்னன் தன தந்தையார் என்று சொல்ல,அதற்கு முன் யார் இருந்தார்கள் என்று குரு கேட்டார்.

அரசனும் தன பாட்டனார் என்றான்.குரு,"உன் தந்தை,பாட்டனார் எல்லாம் இப்போது எங்கே இருக்கிறார்கள்?"என்று கேட்டார்.மன்னனும்,"அவர்கள் இறந்து மேலோகம் சென்று விட்டார்கள்,"என்று சொன்னான்.அதன் பின் குரு கேட்டார்,"உனக்குப் பிறகு இந்த அரண்மனையில் யார் இருப்பார்கள்?"அரசன் சொன்னான்,"என் மகன்,அதன் பின் என் பேரன்."குரு,"ஆக,உன் பாட்டனார் சில காலம் இருந்தார்.

பிறகு போய் விட்டார்.அதன்பின் உன் தந்தையார் இருந்தார்.பிறகு போய் விட்டார்.இப்போது நீ இருக்கிறாய்.நீயும் ஒரு நாள் மேலுலகம் போய் விடுவாய்.உனக்குப் பின் உன் மகன் இங்கு வாசிப்பான்.அவன் போனபின் உன் பேரன் தங்கியிருப்பான்.

யாரும் இங்கே நிரந்தரமாக இருக்கப் போவதில்லை.இப்படி ஒவ்வொருவரும் சில காலம் மட்டும் தங்கிப் போகும் இடத்தை விடுதி என்று சொன்னதில் என்ன தவறு?"என்று கேட்டார்.

# ஒரு கை ஓசை கேட்குதா?

ஜப்பானில் ஒரு புகழ்பெற்ற ஜென் குரு அவர். அவருக்கு சுவோ என்று ஒரு சீடர். அவர் நல்ல ஆசிரியரும்கூட.

ஒரு கோடையில், ஜப்பானின் தென் தீவிலிருந்து ஒரு மாணவன் வந்தான், தத்துவம் பயில. அவனை சுவோவிடம் அனுப்பினார் தலைமை குரு. மாணவனுக்கு முதல் பரீட்சை வைத்தார் சுவோ.

"உனக்கு ஒரு கை ஓசை கேட்கிறதா?" - இதுதான் அந்த சோதனை.

அவனுக்குக் கேட்கவில்லை. அந்த சோதனையில் தேர்ந்தால்தான் சுவோவிடம் பயிற்சி பெற முடியும். எனவே ஒரு கை ஓசையைக் கேட்க அவன் காத்திருந்தான்.... வாரக் கணக்கில் அல்ல... மாதக் கணக்கில் அல்ல.. ஆண்டுக் கணக்கில். ஆண்டுகள் மூன்று முழுசாய் ஓடின!

ஒரு இரவில், சுவோவிடம் வந்தான் மாணவன்.

"என்னால் உங்கள் சோதனையில் தேர்ச்சி பெற முடியவில்லை. அவமானம், தர்மசங்கடத்தைச் சுமந்தபடி என் தீவுக்குச் செல்கிறேன்..." என்றான்.

"தம்பி.. அவசரப்படாதே.. இன்னும் ஒரு வாரம் எடுத்துக் கொள். நன்றாக தியானம் செய்.." என்றார் சுவோ.

ஒரு வாரம் கழிந்தது. மாணவனுக்கு ஒரு கை ஓசை கேட்கவே இல்லை. மீண்டும் சுவோவிடம் வந்தான். அவர் "இன்னும் ஒரு வாரம் முயற்சி பண்ணுப்பா" என்றார். ஆனால் அவன் முயற்சிக்கு வெற்றி கிட்டவில்லை.

மேலும் ஒரு வாரம் கெடு கொடுத்தார் சுவோ. அப்போதும் விடை கிடைக்கவில்லை மாணவனுக்கு.

மிகுந்த ஏமாற்றமும் சோர்வுமாக வந்த மாணவன், 'போதும் குருவே, நான் போகிறேன்', என்றான்.

சரி, ஒரு ஐந்து நாள் மட்டும் இருந்து பார்த்துவிட்டுப் போ என்றார் சுவோ. அந்த ஐந்து நாட்களில் அவனால் எதையும் உணர முடியவில்லை. மீண்டும் சுவோவிடம் வந்து உதட்டைப் பிதுக்கினான்.

இந்த முறை சுவோ இப்படிச் சொன்னார்:

"சரி, கடைசியாக மூன்று தினங்கள். இந்த மூன்று தினங்களில் உன்னால் இந்த சோதனைக்கான விடையைக் காண முடியாவிட்டால், செத்துப் போ," என்றார் கண்டிப்பு மிக்க குரலில்.

மாணவன் தன் அறைக்குத் திரும்பினான். இரண்டாம் நாள் வந்தான்.. "குருவே.. ஒரு கை ஓசை கேட்டது... நான் தேடி வந்தது கிடைத்தது," என்றான்.



# ஒன்பது திருடர்கள்

ஜப்பானில் ஒரு சிறு கிராமம் அது.. இங்கு வசித்து வந்த மக்களுக்கு பெரும் தொல்லையாய் இருந்தார்கள் ஒன்பது திருடர்கள்.

இவர்களை அடக்கி, தங்களைக் காக்க பக்கத்து நகரில் வாள்வீச்சில் புகழ் பெற்றிருந்த ஜென் குரு ஒருவரை அழைத்து வந்தனர்.

கிராமத்திற்கு வந்த குரு அங்கிருந்த உணவகம் ஒன்றிற்கு சென்று சாப்பிடுவதற்காக ஒரு கிண்ணத்தில் அரிசி சாதம் எடுத்து வரச் சொன்னார். தன்னுடைய இருக்கையில் அமர்ந்தவர் இடையிலிருந்த வாளை உருவி தனக்கு எதிரில் வைத்து விட்டு கிண்ணத்தில் வந்த சோற்றினை வெட்டுக் குச்சியால் (சாப்ஸ்டிக்) சாப்பிட ஆரம்பித்தார்.

விஷயம் அறிந்த ஒன்பது திருடர்களும் ஜென் ஆசிரியர் சாப்பிடும் உணவகத்திற்கு வந்து யாருக்கும் தெரியாமல் பின்புறம் மறைந்திருந்து நோட்டமிட்டனர். குருவுக்கு அது தெரிந்துவிட்டது.

அப்போது அவர் தலைக்கு மேல் ஈக்கள் பறந்து கொண்டிருந்தன. ஒவ்வொரு முறையும் ஜென் குரு தன்னுடைய சாப்ஸ்டிக்கினை உயர்த்தி மேலே பறந்து கொண்டிருந்த ஈயினை அடித்தார், பார்க்காமலே. ஒவ்வொரு முறையும் ஒரு ஈ செத்து விழுந்தது. ஒரு முறை கூட குறி தவறவே இல்லை.

ஒன்பது முறை... ஒன்பது ஈக்களை மிகத் துல்லியமாக அடித்துக் கொன்றார். பின்பு திரும்பிப் பார்த்தார்.

மறைந்திருந்த கொள்ளைக் கூட்டத் திருடர்கள் காணமல் போயிருந்தனர். அன்றைக்கு சென்றவர்கள்தான் அதன் பின்பு அந்தக் கிராமத்தின் பக்கமே அவர்களை யாரும் பார்க்கவில்லை

# இந்தா உன் சந்தோஷம்

ஒர் ஊரில் பெரிய கோடீஸ்வரன் இருந்தான். அவனிடம் இல்லாத விஷயங்களே இல்லை. அத்தனையும் அளவுக்கு அதிகமாக கொட்டிக் கிடந்தன. ஆனால் சந்தோஷமும் நிம்மதியும்தான் இல்ல.

சரி, உள்ளூர்லதான் சந்தோஷம் கிடைக்கல. வெளியூர், விதவிதமான நாடுகளுக்குப் போனா கிடைக்குமான்னு, தேடித் தேடிப் போனான்… ம்ஹூம் நிம்மதி கிடைச்சபாடில்ல. மனசுக்குள்ள எப்பவும் பரபரப்பு… எந்த ஊருக்குப் போனாலும் அடுத்த நாளே, வீட்டுல என்ன ஆச்சோங்கிற கவலை. தண்டவாளப் பெட்டி பத்திரமா இருக்குமாங்கிற பயம்… சொந்தக்காரங்களே அமுக்கிடுவாங்களோங்கிற சந்தேகம்!

சரி, இதை மறந்தாவது தொலைக்கலாம்னு சரக்கு, பொண்ணு, போதைப் பொருள்னு சகலத்திலும் இறங்கிட்டான். ஆனா அதிலும் நிம்மதி கிடைக்கல…

சீ போதும் இந்த வாழ்க்கை… இனி துறவறத்தில் இறங்கி சந்நியாசியா போயிடலாம். அமைதி கிடைக்கும்னு யாரோ சொல்ல, அவனும் துறவறத்தில் இறங்கினான்.

உடனே அவன் தன் வீட்டில இருந்த தங்கம், வைரம், வைடூரியம், எக்கச்சக்க பணம் எல்லாத்தையும் ஒரு மூட்டையா கட்டி எடுத்துக்கிட்டு ஒரு துறவியைப் பார்க்கப் போனான்.

அப்போது துறவி ஒருத்தரு மரத்தடியில உட்கார்ந்துட்டிருந்தார். அதைப் பார்த்த அந்த கோடீஸ்வரன், அந்த மூட்டையை துறவியின் காலடில வச்சிட்டு, "குருவே! இதோ என்னோட மொத்த சொத்தும் இதுல இருக்கு. இனி இவை எதுவும் எனக்கு வேணாம். எனக்கு அமைதியும், சந்தோஷமும்தான் வேணும்… அடுத்து என்ன செய்யணும் சொல்லுங்க…," சொல்லி கும்பிட்டான்.

எல்லாத்தையும் கேட்டுக்கிட்ட துறவி, உடனே அந்த மூட்டையை வேகமா பிரிச்சுப் பாத்தார்.

அதில் கண்ணை தங்கமும் வைர வைடூரியங்களும் கட்டுக்கட்டா பணமும்... துறவி சடார்னு, அந்த மூட்டையை கட்டி தலையில் வைத்துக் கொண்டு ஒரே ஓட்டமா ஓட ஆரம்பிச்சார்.

அதைப் பாத்ததும் கோடீஸ்வரனுக்கு இன்னும் பேரதிர்ச்சி. 'அடடா.. இவன் பஞ்சத்துக்காக காவி கட்டிய போலி சாமியார் போலருக்கே'ன்னு பதறிட்டான். கோபம் கோபமாக வந்தது. உடனே துறவியை துறத்த ஆரம்பிச்சிட்டான் நம்மாளு!

துறவியின் ஓட்டத்துக்கு செல்வந்தனால் ஈடு கொடுக்க முடியல. துறவி சந்து பொந்தெல்லால் சர்வ சாதாரணமா ஓடறார். தாவிக் குதிக்கிறார்... ம்ஹூம்.. பணக்காரனால ஒண்ணுமே பண்ண முடியல. ஆனா துறவி எல்லா தெருக்களையும் ஓடி முடித்து கடைசியில் அதே மரத்தடிக்கு வந்து நின்னுட்டார்!

அந்த கோடீஸ்வரனைப் பாத்தார். "என்ன கண்ணா பயந்துட்டியா... இந்தா உன் சொத்து மூட்டை... நீயே வச்சுக்க..." என்று திருப்பிக் கொடுத்தார்.

சொத்து மூட்டை கையில் வந்ததும் கோடீஸ்வரன் அடைஞ்ச சந்தோஷத்துக்கு அளவே இல்ல. ஒரே குதூகலமாயிட்டான். முகமெல்லாம் சிரிப்பு தாண்டவமாடுது.

இப்போது அந்த துறவி கேட்டார்...

"என்னப்பா... புதுசா சிரிக்கிற... இதுக்கு முன்னாடி இந்த செல்வமெல்லாம் எங்கே இருந்துச்சி... உங்கிட்டதானே... ஆனால் அப்ப உன்கிட்ட மகிழ்ச்சி இல்ல... இப்பவும் நீ வச்சிருக்கிறது அதே சொத்துதான். ஆனா சந்தோஷமும் நிம்மதியும் உன் முகத்தில் தெரியுது...!" என்று கூறிவிட்டு, சட்டென்று திரும்பிப் பார்க்காமல் நடந்தார்!

எல்லாம் புரிந்த தெளிவோடு வீடு திரும்பினான் செல்வந்தன்!

# ஏன் இன்னும் சுமந்து கொண்டிருக்கிறாய்?

டான்சன், எகிடோ இருவரும் புத்த பிட்சுகள். ஒரு நாள் சகதியான தெரு ஒன்றில் நடந்து சென்று கொண்டிருந்தனர். மழை விடாமல் பெய்து கொண்டிருந்தது.

ஒரு வளைவில் திரும்பும் போது, நாற்சந்தி போன்ற சந்திப்பின் ஒரு புறத்தில் அழகான இளம்பெண் வேலைப்பாடுடன் கூடிய அழகிய பட்டுச் சேலையைக் கட்டிக் கொண்டு அடுத்த பக்கம் போவதற்கு முடியாமல் நின்று கொண்டிருந்தாள்.

"இங்கே வா!" என்று கூப்பிட்ட டான்சன் அவளைத் தன்னுடைய கையில் அலக்காக தூக்கிக் கொண்டு சகதியான தெருவின் ஒரு புறத்திலிருந்து மறு புறத்திற்கு கொண்டு போய் சேர்த்தார்.

அன்று இரவு மடத்திற்கு திரும்பும் வரை எகிடோ எதுவும் பேசாமல் வந்தான். அதற்கு மேல் பொருக்க முடியாமல், "நம்மைப் போன்ற புத்த பிட்சுகள் பெண்கள் அருகில் செல்வது கூட தவறு. முக்கியமாக இளமையும், அழகும் வாய்ந்த பெண்கள் பக்கத்தில் செல்லவேக் கூடாது. நீ ஏன் அவளைத் தூக்கி கொண்டு சென்றாய்?" என்றான்.

"நான் அந்தப் பெண்ணை அங்கேயே விட்டு விட்டேன்" என்ற டான்சன், "நீ ஏன் இன்னும் சுமந்து கொண்டு இருக்கிறாய்?" என்று திருப்பிக் கேட்டார்.

# கோபம்

ஒருவன் ஒரு ஜென் துறவியைக் காண வந்தான். அவரிடம், "இவ்வுலகில் இப்போது புத்தர் இருக்கிறாரா? இல்லையே? எதுவுமே இல்லை என்பதில் தான் இருக்கிறது. அனைத்துமே வெற்றிடம் தான். யாரும் எதுவும் கொடுப்பதில்லை. எதுவும் பெறுவதில்லை." என்றான்.

உடனே அந்த துறவி அவனை தன்னிடமிருந்த ஒரு குச்சியால் ஒரு அடி அடித்தார்.

அவனுக்குக் கோபம் வந்து விட்டது.

"எதுவுமே இல்லை என்றால் உனது கோபம் எங்கிருந்து வந்தது அப்பனே!", என்று கேட்டார் துறவி.

# போட்டி

ஒரு டீ கடை காரனிடம் ஒரு மல்யுத்த வீரன் எப்போதும் டீ அருந்துவான். ஒரு முறை டீ கடை காரனுக்கும் மல்யுத்த வீரனுக்கும் தகராறு வந்து விட்டது. கோபம் கொண்ட மல்யுத்த வீரன் டீ கடை காரனை மல்யுத்த சண்டைக்கு அழைத்தான்.

அவர்கள் இனத்தில் மல்யுத்த சண்டைக்கு ஒருவன் அழைத்தால் நிச்சயம் ஒப்புக்கொள்ள வேண்டும். இல்லாட்டால் அது பெரும் அவமானம் என கருதப்படும். எனவே டீ கடை காரன் ஒப்பு கொண்டான்.

ஆனால் இதில் எப்படி நாம் ஜெயிக்க போகிறோம் என பயந்தான். அறிவுரை வேண்டி ஒரு ஜென் துறவியை நாடினான்.

அவனது கதை முழுதும் கேட்ட அவர், " சண்டைக்கு இன்னும் எத்தனை நாட்கள் உள்ளன" என்று கேட்டார். " 30 நாட்கள்" என்றான் அவன். " இப்போது நீ என்ன செய்கிறாய்?" என்று பின்பு கேட்டார். " டீ ஆற்றுகிறேன்" என்றான் அவன். "அதையே தொடர்ந்து செய்" என்றார் அவர்.

ஒரு வாரம் கழித்து வந்தான் டீ கடை காரன். "எனக்கு பயம் அதிகரித்தவன்னம் இருக்கிறது. என்ன செய்ய?" என்றான். இன்னும் ஈடுபாடோடு, இன்னும் வேகமாய் டீ ஆற்று" என்றார் ஜென் துறவி.

தன் பயத்தை எல்லாம் வேகமாக மாற்றி வெறித்தனமாய் டீ ஆற்றினான்.

இரண்டு வாரம் ஆனது. அப்போதும் அதே அறிவுரை.

போட்டி நாள் அருகில் வந்து விட்டது. டீ கடை காரன் நடுக்கத்துடன் ஜென் துறவியிடம், "நான் என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டான்.

"போட்டிக்கு முன் ஒரு டீ சாப்பிடலாம் என நீ அவனை கூப்பிடு" என்றார்

துறவி.

மல்யுத்த வீரன் குறிப்பிட்ட நாளன்று வந்து விட்டான்.. "வா.. முதலில் டீ சாப்பிடு" என்றான் கடை காரன். "சரி" என்று அமர்ந்தான் வீரன்.

அவனது டீ ஆற்றும் வேகம் கண்டு மிரண்டு போய் விட்டான்.

இதற்கு முன்பும் அவன் டீ ஆற்றுவதை பார்த்திருக்கிறான் இப்போது என்ன ஒரு வேகம்!

ஒரு சாதாரண டீ ஆற்றும் விஷயத்திலேயே இவ்வளவு முன்னேற்றம் என்றால், போட்டிக்கு எந்த அளவு தயார் செய்திருப்பான் என எண்ணி போட்டியே வேண்டாம் என சென்று விட்டான்.



# இறுதிக் கருத்து

முதிய ஜென் குரு ஒருவர் மரணப் படுக்கையில் இருந்தார். "இன்று மாலைக்குள் இறந்துவிடுவேன்" என்று தன் சீடர்களிடம் தெரிவித்துவிட்டார். இதைக் கேள்விப்பட்ட அவர் நண்பர்கள் பலரும், சிஷ்யர்களும் ஆசிரமத்தை வந்தடைந்தனர்.

மூத்த சீடர் ஒருவர் திடீரென கடைவீதிக்குப் புறப்பட்டார். "ஏய்... என்ன மடத்தனம் பண்ணுகிறாய்... குரு மரணப்படுக்கையில் கிடக்கும்போது அப்படி என்ன அவசரமாக வாங்க வேண்டியிருக்கு?" என்றனர் மற்றவர்கள்.

மூத்த சீடர், "குருநாதருக்கு நாவல்பழம் என்றால் அத்தனை பிரியம். அதை வாங்கத்தான் போகிறேன்!" என்று சொல்லிவிட்டுக் கிளம்பினார்.

எல்லோரும் கவலையோடிருந் தனர். குரு கண்களைத் திறப்பதும் யாரையோ தேடுவதும் பின் மூடிக் கொள்வதுமாக இருந்தார்.

மூத்த சீடர் வந்ததும், "வந்து விட்டாயா... எங்கே நாவல்பழம்?" என்றார்.

அவர் கையில் நாவல் பழத்தைக் கொடுத்ததும், சற்றும் நடுக்கமின்றி அதை வாங்கிக் கொண்டார்.

ஒரு சீடர் குருவிடம், "குருவே... தள்ளாத வயதிலும் உங்கள் கைகளில் நடுக்கமில்லையே?" என்றார்.

குரு சிரித்தபடி, "என் கைகள் ஒருபோதும் நடுங்கியதில்லை. ஏனென்றால் எப்போதும் எதற்கும் நான் பயந்ததே இல்லை!" என்று சொல்லிவிட்டு நாவல் பழத்தை ருசித்து தின்னத் தொடங்கிவிட்டார்.

இன்னொரு சீடர் குருவிடம் பணிந்து, "ஐயா, தாங்கள் சீக்கிரமே இந்த உலகை விட்டுப் பிரியப் போகிறீர்கள். நாங்கள் நினைவில் வைத்துக் கொள்ள

வேண்டிய தங்களின் இறுதிக் கருத்து என்ன?" என்று கேட்டார்.

குரு சிரித்தபடி, "இந்த நாவல்பழம் என்ன அருமையான சுவையுள்ளதாக இருக்கிறது" என்று சொல்லிவிட்டு இறுதி மூச்சை விட்டார்.



# ஏன்?

ஆஸ்ரமத்தின் ஐந்து சீடர்கள் சைக்கிளில் சந்தைக்கு சென்றுவிட்டு திரும்புவதை தலைமை குரு பார்த்துக்கொண்டிருந்தார். அவர்கள் ஆஸ்ரமத்தை அடைந்ததும் ஐவரையும் அழைத்தார் .

ஐவரையும் நோக்கி "நீங்கள் ஏன் உங்கள் சைக்கிளை ஓட்டுகிறீர்கள் ?"என்று வினவினார். "அது எனது வேலைகளை எளிமையாக்குகிறது ஐயா"முதலாமவன் பதிலளித்தான்.

அவனைத்தட்டிகொடுத்து "நீ பெரிய அறிவாளி , நீ வயதானகாலத்தில் என்னைப்போல் கூன் விழாமல் நிமிர்ந்து நடப்பாய்," என்றார் குரு.

இரண்டாவது சீடனோ "நான் சைக்கிள் ஓட்டும்போது என்னால் இயற்கை அழகை எளிதாகவும் விரைவாகவும் ரசிக்க முடிகிறது ஐயா"

அவனை அருகில் அழைத்து "உன் கண்கள் திறந்திருக்கின்றன நீ உலகை ரசிக்கிறாய்" என்றார்.

மூன்றாவது சீடன் "ஐயா நான் பயணிக்கையிலும் கூட மந்திரங்களை ஜெபிக்க முடிகிறது"

குரு தன் கண்கள் விரிய "அடேயப்பா உன் புத்திக்கூர்மை வியக்கவைக்கிறது" என்று இரண்டு கைகளையும் சத்தமாக தட்டினார்.

நான்காவது சீடன் "நான் சைக்கிளில் பயணிப்பதால் ஏகாந்த நிலையை அடைகிறேன் ஐயா" என்றான்

குரு மனநிறைவோடு அவனை கட்டித்தழுவி "நீ ஞானத்தை அடையும் பாதையில் பயணிக்கிறாயடா" என்றார்.

ஐந்தாவது சீடன் நீண்ட அமைதிக்குப் பின் "என் சைக்கிளை ஒட்டுவதற்காக என் சைக்கிளை ஒட்டுகிறேன் ஐயா!" என்றான் .

குரு அவன் காலில் விழுந்து "ஐயா, என்னை மன்னியுங்கள் , நீங்கள் என் சீடனாக இருக்க முடியாது , நான்தான் உங்கள் சீடன்" என்றார்.



# விருந்து

ஒரு மடத்தில் ஜென் துறவி ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் மிகவும் ஜாலியான குணமுடையவர். எப்போதுமே கோபப்படமாட்டார். அவரிடம் சீடர்கள் சிலர் கல்வி கற்று வந்தனர். அவரது சீடர்களுக்கு அந்ததுறவி என்றால் மிகவும் பிடிக்கும்.

ஒரு நாள் அந்த துறவி தன் சீடர்களிம் பேசிக் கொண்டிருக்கையில்,சீடர்கள். அவரிடம்"குருவே! உங்களுக்கு பிடித்த கதை என்ன?" கேட்டனர். அதற்கு அவர்"குதிரையும் ஆடும்" என்று சொன்னார். அதென்ன குதிரையும் ஆடும், அது எந்த மாதிரியான கதை, எங்களுக்கும் அந்தகதையை சொல்லுங்களேன் என்று வேண்டிக் கொண்டனர். அவர்களின் வேண்டுகோளுக்கிணங்க குரு அந்த கதையைசொல்ல ஆரம்பித்தார்.

அதாவது "ஒரு விவசாயி குதிரையையும், ஆட்டையும் வளர்த்து வந்தான். குதிரையும் ஆடும் சிறந்த நண்பர்கள். ஒரு நாள் அந்த குதிரை வைரஸ் நோயால் பாதிக்கப்பட்டது. அதனால் அந்த விவசாயி குதிரைக்கு சிகிச்சை அளிக்க மருத்துவரை அழைத்து வந்தான். மருத்துவர் அந்த குதிரையின் நிலையைபார்த்து, நான் மூன்று நாட்கள் வந்து மருந்து தருகிறேன். அந்த மருந்தை சாப்பிட்டு குதிரைஎழுந்து நடந்தால் சரி, இல்லையெனில் அதனை கொன்றுவிட வேண்டியது தான் என்று சொல்லி, அன்றைய மருந்தை கொடுத்துச் சென்றார்.

இவர்களது உரையாடலைஅந்த ஆடு கேட்டுக் கொண்டிருந்தது. மறுநாள், அந்த மருத்துவர் வந்து அன்றைய மருந்தைக் கொடுத்து சென்றார். பின் அங்கிருந்த ஆடு, அந்த குதிரையிடம் வந்து, "எழுந்து நடநண்பா, இல்லாவிட்டால் அவர்கள் உன்னை கொன்று விடுவார்கள்" என்று அந்த குதிரையை ஊக்குவித்தது.

மூன்றாம் நாளும் வந்துவிட்டது, மருத்துவரும் வந்து குதிரைக்கு மருந்து

கொடுத்துவிட்டு, அந்த விவசாயிடம்"நாளை குதிரை நடக்கவில்லையெனில், அதனை கொன்றுவிட வேண்டும். இல்லாவிட்டால், அந்த வைரஸ் பரவி, மற்றவர்களுக்கு பரவிவிடும்." என்றுசொல்லிச் சென்றார்.

அந்த மருத்துவர் போனதும், ஆடு குதிரையிடம் வந்து, நண்பா! எப்படியாவது எழுந்து நடக்க முயற்சி செய். உன்னால் முடியும், எழுந்திரு! எழுந்திரு! என்று சொல்லியது. அந்த குதிரையும் முயற்சி செய்து எழுந்து நடந்துவிட்டது. எதிர்பாராதவிதமாக அந்த குதிரையை விவசாயி பார்க்க வரும் போது, குதிரைஓடியதைப் பார்த்துசந்தோஷமடைந்து, மருத்துவரை அழைத்து அவரிடம்"என்ன ஒரு ஆச்சரியம். என் குதிரை குணமடைந்துவிட்டது. இதற்கு நிச்சயம்உங்களுக்கு ஒரு விருந்து வைக்க வேண்டும். சரி, இந்த ஆட்டை வெட்டுவோமா!!!" என்று சொன்னார்" என்று கதையை சொல்லி முடித்தார்.

பின் அவர்களிடம் "பார்த்தீர்களா! இந்த கதையில் உண்மையில் குதிரை குணமடைந்ததற்கு அந்த ஆடு தான் காரணம். ஆனால் மருத்துவரின் மருந்தால் தான் குதிரை குணமடைந்தது என்றுஎண்ணி, கடைசியில் அந்த ஆட்டையே பலி கொடுக்க நினைக்கிறார்கள். ஆகவே இந்த உலகில் யாரால் நன்மை கிடைத்ததோ, அவர்களை விட, அந்த நன்மைக்கு அருகில் இருப்பவர்களுக்குத் தான் அதிக மரியாதை கிடைக்கும்." என்று இறுதியில் சொல்லி விடைபெற்றார்.

# பழக்கம்

ஒரு மடாலயத்தில் துறவியும் அவரது சிஷ்யர்களும் மாலை நேரம் தியானம் செய்து கொண்டிருந்தனர். மடத்திலிருந்த ஒரு பூனை சத்தம் போட்டுக்கொண்டே அங்கும் இங்கும் உலவிக் கொண்டிருந்ததால், தியானத்தில் இருந்த ஒருமைப்பாட்டைக் கலைத்துக் கொண்டிருந்தது. அதனால் அந்த துறவி "பூனையைக் கட்டிப்போடுங்கள்" என்று உத்தரவிட்டார்.

சில ஆண்டுகள் கழித்து அந்த துறவி இறந்து விட்டார். ஆனாலும் அந்த பூனையைக் கட்டிப் போடும் பழக்கம் தொடர்ந்து கொண்டிருந்தனர். மேலும் சில வருடங்கள் கடந்தன. அந்த பூனையும் இறந்து விட்டது. வேறொரு பூனை வரவழைக்கப் பட்டு கட்டி வைக்கப் பட்டது. பல ஆண்டுகள் கழித்து சீடர்கள் ," நம் மத வழக்கப்படி பூனையை தியான நேரத்தில் கட்டி வைக்க வேண்டும்" என நூற்குறிப்புகள் எழுதி வைத்தனர்.

# தேனீர் கோப்பை

கல்லூரிப் பேராசிரியர் ஒருவர் புகழ் பெற்ற ஜென் துறவி ஒருவரை சந்திக்கச் சென்றார். பேராசிரியர் ஜென் தத்துவங்களைப் பேசிக் கொண்டிருந்தார், தான் ஜென் பற்றி மேலும் கற்க விரும்புவதாக் கூறினார்.

தேனீர்க் கோப்பையை எடுத்துக் கொண்டு வந்த ஜென் துறவி, கோப்பையின் நுனி வரை தேனீரை ஊற்றினார். கோப்பை நிரம்பி வழிந்தது.

கோபத்துடன் பேராசிரியர் " கோப்பை நிரம்பி விட்டது. மேலும் ஊற்ற முடியாது. நிறுத்துங்கள்" என்று கத்தினார். துறவி கூறினார்: "நீங்களும் இந்த கோப்பை போலத்தான்.

உங்கள் கோப்பையைக் காலி செய்யாவிடின், நான் எவ்வாறு ஜென் பற்றி கற்றுக் கொடுப்பது?"

# இயல்பு

இரு ஜென் துறவிகள் ஆற்றங்கரையில் தவம் செய்து கொண்டிருந்தனர். அப்போது ஒரு தேள் ஆற்றில் தத்தளித்துக் கொண்டிருந்ததைக் கவனித்தனர். உடனடியாக ஒரு துறவி அந்த தேளை எடுத்து ஆற்றங்கரையில் விட்டார். அப்போது அத்தேள் அவரைக் கடித்துவிட்டது.

சிறிது நேரத்தில் திரும்பவும் அத்தேள் ஆற்றில் விழுந்து விட்டது. மீண்டும் அத்துறவி அதனை எடுத்து கரையில் விடும் போது அத்தேள் அவரைக் கொட்டிவிட்டது. இதனைக் கண்ட இன்னொரு துறவி, ″நண்பரே , தேள் கொட்டும் எனத் தெரிந்தும் ஏன் மீண்டும் மீண்டும் அதனைக் காப்பாற்ற எண்ணுகிறீர்கள்?″ என்று கேட்டார்.

துறவி சொன்னார்: “கொட்டுவது தேளின் இயல்பு. காப்பாற்றுவது எனது இயல்பு”

# வேண்டுமானால் நீயே தெரிந்து கொள்

ஒரு நாள் ஜென் குரு ஒருவர் ஆற்றுப் பாலத்தின் மீது நின்று கொண்டு, ஆற்று நீரைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

அப்போது அந்த வழியாக மூன்று பிக்குகள் வந்து கொண்டிருந்தார்கள். அவர்கள் ஆற்றுப் பாலத்தின் மீது நின்று கொண்டிருந்த ஜென் குருவைப் பார்த்து வந்து கொண்டிருந்தனர். அவர்கள் ஜென் வழியைப் பின்பற்றாதவர்கள் தான். எனினும் அவரை ஜென் குரு என்று அடையாளம் கண்டு, அவர் அருகில் வந்து நின்றார்கள்.

அவர்களில் ஒருவர் ஜென் குருவைப் பார்த்து,''ஆறு எவ்வளவு ஆழம்?'' என்று கேலியாகக் கேட்டார்.

அப்போது குரு சிறிதும் யோசிக்காமல், கண் இமைக்கும் நேரத்திற்குள் கேள்வி கேட்டவரைத் தூக்கி ஆற்றில் போட்டுவிட்டு ''நீயே அதை அளந்துபார்'' என்று சொன்னார்.

# ஆணவம்

ஒரு நாட்டின் பிரதம மந்திரியாக டாங் வம்சத்தை சேர்ந்த ஒருவர் இருந்தார். அவர் ஆட்சியை நன்கு நடத்துவதில் மிகவும் சிறந்தவர். அத்தகைய அவருக்கு புகழ், அதிகாரம் மற்றும் செல்வமானது இருப்பினும், அவர் புத்த சமயக் கருத்துகளை பற்றி அறிவதில் ஆர்வமுள்ளவராகக் இருந்தார்.

அதற்காக மந்திரி, அந்த ஊரில் இருக்கும் ஒரு ஜென் குருவிடம் அடிக்கடி சென்று கற்றுக் கொண்டார். அவ்வாறு கற்கும் அவருக்கு, தான் ஒரு மந்திரி என்ற எந்த ஒரு அலட்டலும் இல்லாமல், ஒரு உண்மையான சிஷ்யன் போல நன்கு கற்று வந்தார். அவர்கள் இருவரும் ஒரு நல்ல குரு, சிஷ்யனாக இருந்து வந்தனர். மேலும் மந்திரி, ஒரு உண்மையான சிஷ்யனாகவே இருந்து வந்தார்.

ஒரு நாள் எப்போதும் போல, அந்த மந்திரி ஜென் குருவிடம் கற்க வந்தார். அப்போது அந்த மந்திரி குருவிடம், "புத்த சமயத்தின் படி, ஆணவம் என்றால் என்ன?" என்று கேட்டார். அதை கேட்டதும் உடனே குருவின் முகமானது சிவப்பு நிறமாக மாறியது. பின் குரு கோபமாக தனது குரலை சற்று உயர்த்தி "என்ன முட்டாள்தனமான கேள்வி இது?" என்று கேட்டார்.

இந்த மறுமொழியை எதிர்பாராத அந்த மந்திரிக்கும் கோபமும், அதிர்ச்சியும் ஏற்பட்டது. பின் குரு சிரித்துக் கொண்டே "இது தான் உண்மையான ஆணவம்" என்றார்.

# வெகுமதி

ஒரு ஊரில் சிச்சிரி கோஜென் என்ற குரு ஒருவர் வாழ்ந்து வந்தார். அவருக்கு கடவுள் பக்தி மிகவும் அதிகம். அதனால் அவர் தினமும் காலையிலும், மாலையிலும் ஸ்தோத்திரம் சொல்லி கடவுளைத் துதிப்பது வழக்கம். ஒரு நாள், அவ்வாறு கடவுளை ஸ்தோத்திரம் சொல்லி துதிக்கையில், ஒரு திருடன் குருவின் வீட்டிற்குள் நுழைந்து, அவரிடம் கத்தியைக் காட்டி மிரட்டி பணம் கேட்டான். அவ்வாறு கொடுக்காவிட்டால் உயிரை எடுத்துவிடுவேன் என்று கூறினான்.

அதற்கு அந்த குரு, "பணமானது அந்த பெட்டியில் இருக்கிறது. என்னை தொந்தரவு செய்யாதே!" என்று கூறி, மீண்டும் ஸ்தோத்திரம் சொல்லத் தொடங்கினார்.

சிறிது நேரம் கழித்து, குரு அந்த திருடனிடம் "சிறிது பணத்தை வைத்துச் செல். நான் நாளை வரி கட்ட வேண்டும்" என்று கூறினார். அந்தத் திருடனும் அவர் கூறியதைப் போல் சிறிது பணத்தை வைத்து மீதமுள்ள பணத்தை எடுத்துக் கொண்டான்.

மீண்டும் குரு அவனை அழைத்து, "ஒருவர் பரிசுக் கொடுத்தால், அவருக்கு நன்றி சொல்ல வேண்டும்." என்று கூறினார். அந்த திருடனும் நன்றி கூறி சென்றுவிட்டான்.

ஆனால் எதிர்பாராத விதமாக அவனோ போலீஸிடம் மாட்டிக் கொண்டான். அவன் பணத்தை திருடியதற்கு சாட்டியாக, போலீஸ் குருவை அழைத்து விசாரித்தனர். ஆனால் குருவோ போலீஸிடம், "என்னைப் பொறுத்தவரை அவன் திருடன் அல்ல. நான் அவனுக்கு பணம் கொடுத்தேன், அதற்கு அவன் எனக்கு நன்றி சொன்னான்" என்று கூறினார்.இருப்பினும் அந்த குற்றத்திற்காக சில காலம் அவன் சிறை தண்டனை அனுபவித்தான். பிறகு அவன் திருட்டுத் தொழிலை விட்டு குருவிடம் சீடனாக மாறினான்.

# கடைசி சிரிப்பே முதல் சிரிப்பு!

மொகுஜென் என்னும் ஜென் துறவிக்கு எப்படி சிரிப்பதென்றே தெரியாது, சொல்லப்போனால் எப்போதும் முகத்தை கோபமாக இருப்பது போலவே வைத்திருப்பார். ஒரு நாள் அவர் நோயால் பாதிக்கப்பட்டிருந்தார். ஆகவே "இந்த உலகத்தை விட்டு போகப் போகிறோம்" என்பதை உணர்ந்த அவர் தன் சீடர்களுக்கு ஒரு உண்மையை சொல்ல விரும்பினார். அது என்னவென்றால், நீங்கள் என்னிடம் பத்து ஆண்டுகளுக்கு மேல் படித்துள்ளனர். எங்கே நீங்கள் கற்றுக் கொண்ட ஜென் தத்துவத்தை வெளிகாட்டுங்கள் என்று சொன்னார். பின் யார் ஒருவர் அதனை சரியாக வெளிப்படுத்துகிறாரோ, அவரே என் வாரிசு மற்றும் அவர் என் கோப்பையை வாங்கிக் கொள்ளுங்கள் என்று கூறினார்.

அனைத்து சீடர்களும் பதிலளிக்காமல், மொகுஜென்னின் சிரிக்காத முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தனர்.

என்சோ என்னும் சீடன், அவரைப் பார்த்தாலே மிகவும் பயப்படுவான். இருப்பினும் அவருடன் நீண்ட நாட்கள் இருந்ததால், அவரின் அருகில் சென்று, அங்குள்ள ஒரு மருந்து கோப்பையை நகர்த்தினான். இதுவே துறவியின் கேள்விக்கான பதில் என்பது போல் அந்த என்சோ வெளிப்படுத்தினான்.

அப்போது அந்த துறவியின் முகம் இன்னும் கடுமையாக மாறியது. பின் அந்த துறவி "என்ன அனைவருக்கும் புரிந்ததா?" என்று கேட்டார்.

அதனைக் கண்ட அவன், உடனே எழுந்து வெளியே சென்று விட்டு, திரும்பி பார்த்து, மீண்டும் அவரின் அருகில் சென்று, அந்த கோப்பையை நகர்த்தினான்.

பின்னர் இதுவரை சிரிக்காமல் இருந்த துறவியின் முகமானது, அவனது செய்கையைக் கண்டு, புன்னகையானது பீறிட்டு வெளிவந்தது. பிறகு அந்த துறவி

அவனிடம் "முட்டாளே! நீ என்னுடன் பத்தாண்டுகள் இருந்தாய். நீயோ இதுவரை என் உடல் நிலை எவ்வாறு உள்ளது என்று பார்த்ததில்லை. இருப்பினும் நீ அதைப் புரிந்து கொண்டு, எனக்கு உதவினாய். ஆகவே நீ இந்த கோப்பையை எடுத்துக் கொள். இனிமேல் இது உனக்கு சொந்தமானவை" என்று சொன்னார்



# நல்லது நினைத்தால், நல்லது நடக்கும்...

ஒரு பெரிய மடாலயத்தில் சீடர்கள் வட்டமாக உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கையில் ஒரு வாக்குவாதம் எழுந்தது. அது என்னவென்றால், "திருடனாக இருப்பவனுக்கு எப்போதும் கெட்டது தான் நடக்கும்" என்று ஒரு பக்கமும், இன்னொரு பக்கம் "இல்லை, நல்லதும் நடக்கும்" என்றும் வாதாடிக் கொண்டிருந்தனர். அப்போது அவர்களது குரலைக் கேட்டு வந்த ஜென் மாஸ்டர், என்ன பிரச்சனை என்று கேட்டார். அதற்கு அவர்கள் அந்த வாக்குவாதத்தை கூறினர். ஆகவே அதில் உள்ள உண்மையை புரிய வைப்பதற்கு, அவர்களுக்கு ஒரு கதையைக் கூற ஆரம்பித்தார்.

அது என்னவென்றால், "ஜென்கை என்பவன் ஒரு சாமுராய் மகன். அவன் 'எடோ' என்ற இடத்திற்கு பயணித்தார். அங்கு ஒரு உயர் அதிகாரியிடம் பணியாளாக சேர்ந்து, அவரின் மனைவியை காதலித்து, மேலும் தற்காப்பிற்காக, அந்த அதிகாரியின் பெருந்தொகையை எடுத்துக் கொண்டு, அவருடைய மனைவியுடன் ஓடிவிட்டான்.

பின்னர், இருவரும் நன்கு சந்தோஷமாக வாழ்வதற்கு திருடர்களாக மாறினர். ஆனால் அந்த பெண், ஜென்கையின் நடவடிக்கைகளை கண்டு வெறுப்படைந்தாள். அதனால் அவள் அவனை விட்டு சென்று விட்டாள். ஆகவே மனமுடைந்த அவன் 'பூசன்' என்ற மாகாணத்தில் பிச்சைக்காரனாக இருந்தான்.

மேலும் அவனது கடந்த காலத்தில் செய்த பாவத்திற்கு பரிகாரமாக, ஜென்கை தனது வாழ்நாளில் சில நல்ல காரியங்களை சாதிக்க எண்ணினான். அப்போது ஒரு குன்றின் மீது ஓர் ஆபத்தான சாலை இருப்பதால், பல பேர் மரணம் மற்றும் காயம் அடைகின்றனர் என்பதை தெரிந்து கொண்டு, அங்கு அந்த மலை வழியாக ஒரு

சுரங்கம் வெட்ட எண்ணினான்.

பகல் நேரங்களில் உணவுக்கு பிச்சை எடுப்பதும், இரவு வேளையில் சுரங்கம் தோண்டுவதை வேலையாகவும் செய்து வந்தான். முப்பது ஆண்டுகள் ஆயிற்று, சுரங்கப்பாதை 2.280 அடி நீளம், 20 அடி உயரம் மற்றும் 30 அடி அகலம் ஆனது.

வேலை முடியும் இரண்டு ஆண்டுகளுக்கு முன், அவன் பணியாளாக ஒரு அதிகாரியின் கீழ் வேலை செய்தான் அல்லவா, அவருடைய மகன் ஒரு திறமைமிக்க வாள்வீரன். அவன் ஜென்கையை கண்டுபிடித்து பழிவாங்க வேண்டும் என்று தேடி அலைந்து வந்தான். அப்பொழுது அந்த ஜென்கையும் அவன் கண்ணில் தென்பட்டார். அதனால் ஆத்திரமடைந்த அவன் "நான் உன்னை என் கைகளால் கொல்ல வேண்டும்" என்று கூறினான். அப்போது அந்த ஜென்கை "நீ என்னை தாராளமாக கொள்ளலாம், ஆனால் எனக்கு ஒரு ஆசை உள்ளது, அது என்னவெனில் இந்த சுரங்கத்தை முடித்ததும் நீ என்னை கொல்," என்று கூறினார்.

எனவே அந்த மகனும் அந்த நாளுக்காக காத்திருந்தான். பல மாதங்கள் கடந்தது. ஜென்கை மட்டும் தோண்டி கொண்டிருந்தான். எதுவும் செய்யாமல் இருந்ததால், அந்த வாள்வீரன் மிகவும் சோர்வடைந்தான். அதனால் அவனும் ஜென்கைக்கு உதவியாக சுரங்கம் தோண்ட ஆரம்பித்தான். ஓர் ஆண்டு காலம் ஆனதும், அந்த மகன் ஜென்கையின் வலிமையும் தன்னம்பிக்கையையும் கண்டு வியந்தான்.

கடைசியாக சுரங்கப்பாதை முடிந்தது. மக்களும் பாதுக்காப்பாக அந்த சுரங்கத்தில் பயணித்தனர்.

"இப்போது என் தலையை துண்டி, என் வேலை முடிந்தது" என்று ஜென்கை கூறினார்.

"எப்படி நான் என் சொந்த ஆசிரியர் தலையை துண்டிக்க முடியும்?" என்று

கண்களில் இருந்து கண்ணீர் வழியக் கேட்டான்" என்று சொன்னார்.

பின் இறுதியில் ஜென் குரு சீடர்களிடம் "திருடனாக இருந்து, திருந்தியப் பின் நல்லதை நினைத்தால், அவனுக்கு நல்லதே நடக்கும்" என்று சொல்லி, உள்ளே சென்று விட்டார்.



# உண்மை

ஒரு பெரிய பணக்காரன் ஒருவன் ஜென் துறவியை சந்தித்து, "நான் என் குடும்பத்துடன் மகிழ்ச்சியாக இருப்பதை நினைவூட்டும் வகையில் ஏதாவது எழுதிக் கொடுங்கள்" என்று கேட்டான்.

அதற்கு அந்த மாஸ்டர் ஒரு காகிதத் துண்டை எடுத்து, அதில் "தந்தை இறக்கிறான், மகன் இறக்கிறான், பேரன் இறக்கிறான்" என்று எழுதிக் கொடுத்தார்.

அதைப் படித்த அவனுக்கு ஒரே கோபம் மூண்டது. "என்ன? நான் உங்களிடம் என்னை ஊக்குவிக்கும் வகையிலும், என் வருங்கால சந்ததியினர் அதைப் படித்து வாழ்க்கையை புரிந்து கொள்ள வேண்டும் என்பதற்கு கேட்டால், நீங்கள் என் மனம் புண்படும் வகையில் எழுதித் தருகிறீர்களே!" என்று ஆத்திரத்துடன் கேட்டான்.

அதற்கு துறவி "ஆமாம். நானும் நீ கேட்டது போல் உன் குடும்பத்துடன் சேர்ந்து வாழ்ந்த ஒரு மகிழ்ச்சியான ஒன்றைத் தான் எழுதியுள்ளேன். எப்படியெனில், ஒரு வேளை உன் மகன் முதலில் இறந்துவிட்டால், அது ஒவ்வொருவரின் மனதிலும் பெரும் வலியை உண்டாக்கும். அதுவே உன் பேரன் முதலில் இறந்தால், அது தாங்க முடியாத அனுபவமாக இருக்கும். எப்படியிருந்தாலும் உங்கள் குடும்பத்தில் இருப்பவர்கள் வரிசையாக இறக்கப் போகிறார்கள். அது தான் வாழ்க்கைப் பற்றிய இயற்கையின் உண்மை. ஆகவே நானும் அதை, அந்த காகிதத்தில் எழுதியுள்ளேன்.

எப்படியிருப்பினும் இந்த உலகில் பிறக்கும் அனைவருக்குமே வலி நிச்சயம் இருக்கும். அதையே சந்ததியினரும் பின்பற்றுவர். ஆகவே இந்த காகிதத்தில் இருப்பது எப்போதும் அழியாததாய் இருக்கும்" என்று விளக்கினார்.

# அனைத்துமே ஒன்றுதான்!!

பல்கலைக்கழக மாணவன் ஒருவன், கசன் என்கின்ற ஜென் துறவியை பார்க்கச் சென்றான். அப்போது அவரிடம் "நீங்கள் எப்போதாவது பைபிளைப் படித்ததுண்டா?" என்று கேட்டான். அதற்கு அந்த துறவியும் "இல்லை. எங்கே, அதை எனக்கு படித்து காட்டு" என்றார். அந்த மாணவனும் உடனே தன்னிடம் இருந்த பைபிளைத் திறந்து செயின்ட் மத்யு-வின் வாசகத்தை வாசித்தான்.

அந்த பைபிள் வாசகத்தில் ஒன்றான: "என்னத்தை உண்போம், என்னத்தைக் குடிப்போம் என்று உங்கள் ஜீவனுக்காகவும்; என்னத்தை உடுப்போம் என்று உங்கள் சரீரத்துக்காகவும் கவலைப்படாதிருங்கள். ஆகாரத்தைப் பார்க்கிலும் ஜீவனும், உடையைப் பார்க்கிலும் சரீரமும் விசேஷித்தவைகள் அல்லவா?

ஆகாயத்துப் பட்சிகளைக் கவனித்துப்பாருங்கள்; அவைகள் விதைக்கிறதுமில்லை, அறுக்கிறதுமில்லை, களஞ்சியங்களில் சேர்த்து வைக்கிறதுமில்லை; அவைகளையும் உங்கள் பரமபிதா பிழைப்பூட்டுகிறார்; அவைகளைப் பார்க்கும் போது நீங்கள் விசேஷித்தவர்கள் அல்லவா?....

உடைக்காகவும் நீங்கள் கவலைப்படுகிறதென்ன? காட்டுப்புஷ்பங்கள் எப்படி வளருகிறதென்பதைக் கவனித்துப்பாருங்கள். அவைகள் உழைக்கிறதுமில்லை, நூற்கிறதுமில்லை;

என்றாலும் சாலொமோன் முதலாய்த் தன் சர்வ மகிமையிலும் அவைகளில் ஒன்றைப்போலாகிலும் உடுத்தியிருந்ததில்லை என்று, உங்களுக்குச் சொல்லுகிறேன்.

அற்ப விசுவாசிகளே! இன்றைக்கு இருந்து நாளைக்கு அடுப்பிலே போடப்படும் காட்டுப் புல்லுக்குத் தேவன் இவ்விதமாக உடுத்துவித்தால், உங்களுக்கு

உடுத்துவிப்பது அதிகம் நிச்சயமல்லவா?

ஆகையால் நாளைக்காக கவலைப்படாதிருங்கள்; நாளையத்தினம் தன்னுடையவைகளுக்காகக் கவலைப்படும். அந்தந்த நாளுக்கு அதனதன் பாடு போதும்." என்று படித்து முடித்தான்.

உடனே அந்த துறவி "எவனொருவன் இந்த வார்த்தைகளை கடைபிடிக்கிறானோ, அவன் பெரும் ஞானம் கொண்டவனாவான்" என்று கூறினார்.

மேலும் அந்த மாணவன் மறுமுறை அந்த பைபிளில் மற்றொரு வாக்கியத்தைப் படித்தான். அந்த வாசகம் என்னவென்றால் "கேளுங்கள், அப்பொழுது உங்களுக்குக் கொடுக்கப்படும்; தேடுங்கள், அப்பொழுது கண்டடைவீர்கள்; தட்டுங்கள் அப்பொழுது உங்களுக்குத் திறக்கப்படும்." என்பதாகும்.

இந்த வாசகத்தைக் கேட்டதும் துறவி "அருமை. இதைத் தான் புத்த போதனையிலும் சொல்லப்படுகிறது. ஆகவே இந்த உலகில் எதுவும் புத்த போதனையை விட அப்பாற்பட்டது அல்ல. அனைத்தும் புத்த போதனைக்கு நெருங்கினவை தான்" என்று குறிப்பிட்டார்.

# கோபத்தை அடக்குவது எப்படி?

ஜென் குரு பங்கேயின் மாணவன் ஒருமுறை அவரிடம் வந்து "மாஸ்டர், எனக்கு அடக்க முடியாத கோபம் வருகிறது. இதை எப்படி குணப்படுத்துவது?" என்று கேட்டான்.

அப்படியெனில் "ஏதோ ஒன்று உன்னை பயங்கரமாக ஆட்டி வைக்கிறது. சரி, இப்பொழுது அந்த அடக்க முடியாத கோபத்தை காட்டு" என்று சொன்னார்.

அதற்கு மாணவன் "அதை இப்பொழுதெல்லாம் காட்ட முடியாது" என்றான்.

"வேறு எப்பொழுது காட்ட முடியும்?" என்று குருவும் கேட்டார்.

அதற்கு அவன் "அது எதிர்பாராத நேரத்தில் தான் வருகிறது" என்றான்.

அப்போது குரு "அப்படியென்றால் அது உன்னுடைய சொந்த இயல்பாக இருக்க முடியாது. அவ்வாறு உனக்கு சொந்தமானதாக இருந்தால், நீ எந்த நேரத்திலும் எனக்கு அதை காண்பித்திருப்பாய். நீ பிறக்கும் போது அதை கொண்டு வரவில்லை, உன் பெற்றோரும் உனக்கு அதை கொடுக்கவில்லை. அப்படியிருக்க உனக்கு சொந்தமில்லாத ஒன்றை ஏன் உன்னுள் வைத்துள்ளாய் என்று யோசித்து பார். பின் உனக்கே புரியும்" என்று சொன்னார்.

# விதியை மாற்றி அமை

ஒரு முறை ஜப்பானிய ராஜா எதிரிகளை தாக்க ஓர் இராணுவ படை ஒன்றை தயார் செய்து, போருக்கு தயாரானார். அவர் "எப்படியும் இந்த போரில் வெற்றி பெறுவோம்" என்று நம்பிக்கையுடன் இருந்தார். ஆனால் அந்த படையினரோ பெரும் சந்தேகத்துடனேயே இருந்தனர்.

இதனால் அந்த ராஜா தன் படை வீரர்களுக்கு தைரியத்தை வரவழைக்க என்ன செய்யலாம் என்று ஒரு ஜென் துறவியைப் பார்த்து, கேட்கச் சென்றார். அப்போது அந்த துறவி ராஜாவிடம், ஒரு யோசனையை சொன்னார். அதேப்போல் ராஜாவும் செய்தார்.

அது என்னவென்றால், அந்த ராஜா போர் செல்லும் வழியில், அவர்கள் குல தெய்வ கோவிலில் நிறுத்தி பிரார்த்தனை செய்து, ஒரு நாணயத்தை எடுத்து வீரர்களின் முன் "நான் இப்போது இந்த நாணயத்தை சுழற்றி விடுவேன், தலை விழுந்தால் நாம் வெற்றி பெறுவோம் இல்லையேல் போரில் தோற்போம்" என்று துறவி சொன்னதைச் சொல்லி, பின் அவர்களிடம் "நம் தலை விதியை இந்த நாணயம் சொல்லும்" என்று கூறி நாணயத்தை சுழற்றினார்.

அனைவரும் அதை கூர்ந்து கவனித்தனர். அப்போது தலை விழுந்தது. அதனால் அந்த வீரர்கள் நாம் நிச்சயம் வெற்றி பெறுவோம் என்று நம்பிக்கையுடனும் சந்தோசத்துடனும் எதிரிகளை தாக்கி வெற்றிப் பெற்றனர். யுத்தத்திற்கு பின்னர், துணை மந்திரி "விதியை யாராலும் மாற்ற முடியாது." என்று ராஜாவிடம் சொல்ல "ஆம், என்று ராஜா சொல்லி அந்த நாணயத்தின் இரு பக்கத்திலும் தலை இருப்பதை" காண்பித்தார்.

# கவனம்

ஒரு ஜென் துறவி அவரது சீடன் ஒருவன் தோட்டத்தை சுத்தம் செய்வதை பார்த்து கொண்டிருந்தார். அவன் அதிக நேரமாக ஒரே வேலையை செய்தும் சுத்தம் இல்லாமல் இருந்தது. ஜென் மாஸ்டர் அவனை அருகில் அழைத்து ஒரு கதையை கூறினார்.

அது, "ஒரு முறை ஓர் சிறந்த ஓவியன் அவருடைய திறமையை முன்வைத்து ஒரு ஓவியத்தை வரைந்து, பின் அவருடைய சக தோழனிடம் "எப்படி இருக்கிறது" என்று கேட்டார்.

தோழனும் "இது நன்றாக இல்லை" என்று கூறினார்.

மீண்டும் மீண்டும் அந்த ஓவியர் வரைந்தவற்றை சரிசெய்ய, தோழனோ நன்றாக இல்லை என்று சொல்லி கொண்டு இருந்தார்.

அதனால் அந்த ஓவியர் தன் தோழனிடம், "நீ போய் எனக்கு கொஞ்சம் தண்ணீர் கொண்டு வா!" என்று தோழனை அனுப்பி விட்டு, பின்பு அவர் ஓவியத்தில் முழு கவனம் செலுத்தி ஓவியத்தை வரைந்தார்.

தண்ணீர் கொண்டு திரும்பிய தோழன், அந்த ஓவியத்தை கண்டு ஆச்சரியத்துடன் "படு சூப்பர்" என்று சொல்லி, அவரை பாராட்டினான்.

# சிரிக்கும் புத்தர்

அமெரிக்காவில் சீன தெருவில் அமைக்கப்பட்டுள்ள சிரிக்கும் புத்தர் பொம்மை சிலையை பற்றிய கதை இது. அந்த சிலையை சிரிக்கும் புத்தர் என்றும் அழைப்பர். உண்மையில் அந்த சிரிக்கும் புத்தர் ஒரு ஜென் துறவி. ஆனால் அவர் அப்படி ஒரு ஜென் துறவி என்று சொல்லி பெருமைப்படும் நபர் அல்ல.

அவர் எப்பொழுதும் சந்தோசமாக ஒரு மூட்டையில் சாக்லேட், பிஸ்கட், நட்ஸ் போன்றவைகளை நிரப்பிக் கொண்டு வழியில் பார்க்கும் குழந்தைகளுக்கு கொடுப்பதை வழக்கமாக செய்து வந்தார்.

அவர் எந்த ஒரு ஜென் பக்தர்களை பார்க்கும் போதும், அவர்களிடம் ஒரு ரூபாய் கொடு என்று கை நீட்டி கேட்பார்.

ஒரு நாள் அவர் மற்றொரு ஜென் துறவியை பார்த்தார். அப்பொழுது அந்த மற்றொரு ஜென் துறவி இவரிடம் "ஜென் வாழ்கையின் முக்கியத்துவம் என்ன?" என்று வினவினார்.

இவர் உடனே அவர் சுமந்து கொண்டு இருந்த, அந்த மூட்டையை கீழே வீழ்த்தினார்.

பின்னர் அந்த மற்றொரு ஜென் துறவி மறுமுறை அவரிடம் "ஜெனின் இயல்பாக்கம் என்ன?" என்றார்.

அதற்கு அந்த சிரிக்கும் புத்தரான ஜென் துறவி மீண்டும் அந்த மூட்டையை தன் தோளில் சுமந்து அவர் வழியே அவர் சென்றார்.

# கடவுளைக் காண வேண்டும்

ஒரு ஆற்றின் கரையின் யோகத்தில் ஆழ்ந்திருந்த ஒரு ஜென் குருவிடம் ஒரு இளைஞன் சென்று " குருவே நான் உங்கள் சீடனாக விரும்புகிறேன்" என்றான்.

"எதற்காக நீ என் சீடனாக விரும்புகிறாய்?" என்று ஜென் குரு அவனை திருப்பிக்கேட்டார்

"ஏனென்றால் நான் கடவுளை கண்டறிய விரும்புகிறேன்". என்று அவன் பதிலளித்தான்.

உடனே குதித்தெழுந்த ஜென் குரு அவன் கழுத்தை பிடித்து ஆற்றுக்குள் அவனை இழுத்துச் சென்று நீருக்குள் அவன் தலையை அமுக்கினார். சுமார் ஒரு நிமிட நேரத்துக்கு அவன் மூச்சு விட முடியாமல் கால்களையும் கைகளையும் உதறி தப்பிக்க முயன்றும் விடாமல் அப்படி செய்தார். பின்னர் அவனை விடுவித்து கரைக்கு இழுத்து வந்தார். அந்த இளைஞன் புரையேறிய நீரை கக்கி காற்றை இழுத்து சுவாசித்து தடுமாறினான். அவன் இயல்பு நிலைக்கு திரும்பிய பின்னர் ஜென் குரு அவனைப்பார்த்து "இப்போது சொல், நீருக்குள் அமிழ்ந்திருந்த போது எதை நீ மிகவும் விரும்பினாய்?" என்று கேட்டார்.

"காற்றை!" என்று அந்த இளைஞன் பதில் அளித்தான்.

"நல்லது, நீ வீட்டுக்கு சென்று எப்போது நீ சுவாசிக்கும் காற்றினை விரும்புவதுபோல் கடவுளையும் அடைய விரும்புகிறாயோ அப்போது நீ என்னிடம் திரும்பி வா!" என்று ஜென் குரு அவனை அனுப்பி வைத்தார்.